ஜனநாயகம், சமாதானம் ஆகிய கொள்கைகளெல்லாம், சமாதானத்தைப் பாதுகாப்பது, உலக யுத்தத்தைத் தடுப்பது என்ற சாத்தியப்பாட்டை "மேலும் மேலும் யதார்த்தமானதாக்குகிறது"! *. சர்வதேசத் துறையிலும் உலக யுத்த அபாயம் யதார்த்தமானதே ஆயினும் மிகவும் பெரியதே. ஆனால் அதே சமயத்தில் அதற்கெதிராக ஒன்று திரண்டுள்ள சக்திகள் மிகமிக வலிமை வாய்ந்தவையாகும். இந்த சக்திகள் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டுமிருக்கின்றன. சமாதான இயக்கம், எல்லா யுத்தங்களையும் எதிர்க்க முயலுகிறது. ஏகாதிபத்திய நாடுகளுக்கிடையிலான் ஏற்படும் யுத்தங்களையும் எதிர்க்க முயலுகிறது. இன்று ஏற்படும் ஒவ்வொரு யுத்தமும் மக்களுக்குச் சொல்லொணாத துன்ப துயரங்களை விளைவிக்கும். மனித இனத்தின் வளர்ச்சியைத் தடைப்படுத்தும். மேலும், யுத்தம் தொடர்ச்சியாக இருக்குமேயானால், அது எந்தெந்த நாடுகளுக்கிடையிலான் ஏற்பட்டாலும் தான் உலக யுத்தம் ஏற்படும் ஆபத்து அதிகமாகும். *. ஏகாதிபத்திய நாடுகளுக்கிடையிலான் ஏற்படும் குறிப்பிட்ட யுத்தங்களையும் சமாதான இயக்கத்தினால் தடுக்க முடியும். ஆனாலும், அதனுடைய வெற்றி, பொதுவாக ஏகாதிபத்தியங்களுக்குள்ளே எதிர்க்க முடியாமல் ஏற்படும் யுத்தங்களைத் தடுக்க போதியதல்ல. ஏகாதிபத்திய அமைப்பின் செயல்படும் பொருளாதார விதிகளிலிருந்து அந்த யுத்தங்கள் தவிர்க்கமுடியாமல் தோன்றுகின்றன. *. ஏகாதிபத்திய நாடுகள் யாவும் ஒன்றுக்கொன்று மிகவும் நட்புறவுடையதாகவும், நேசபாவத்துடனிருப்பதாகவும் பீற்றிக் கொள்கின்றன. கம்யூனிஸ "ஆபத்து"க்கு எதிராக ஒன்றுபட்டுப் போராட வேண்டும் என்றெல்லாம் தம்பட்டமடித்துக் கொள்கின்றன. ஆனாலும் அவை எல்லாம், சுருங்கிப் போயுள்ள ஏகாதிபத்திய உலகத்தினுள்ளே பயங்கர முரண்பாடுகள் வெடித்துக் கொண்டிருப்பதை மறைக்க முடியாது. இரண்டாவது உலகயுத்தத்தில் வெற்றியடைந்த ஏகாதிபத்திய வல்லரசுகளும், தோல்வியடைந்த வல்லரசுகளுக்கிடையேயும், வெற்றியடைந்த வல்லரசுகளுக்கிடையேயும், எல்லாவற்றிற்கும் மேலாக, மார்க்கெட்டுகளுக்காகவும், மூலதனம் போடுவதற்கான பிரதேசங்களுக்காகவும், செல்வாக்கு மண்டலங்களுக்காகவும் பிரிட்டனுக்கும், அமெரிக்காவிற்குமிடையிலான் அந்த முரண்பாடுகள் வெடித்துக் கொண்டிருக்கின்றன. *. ஏகாதிபத்தியத்தின் பொதுநெருக்கடி ஆழமாக, ஆக சோஷலிஸ ஜனநாயக முகாத்திற்கு எதிராக அது யுத்தத்திலாழ்த்துவதன் மூலம் வெற்றி கிடைக்குமென்ற நம்பிக்கை, மங்க, மங்க இந்த முரண்பாடுகள் மேலும் மேலும் முன்னணிக்கு வருகின்றன. *. எப்படி இந்த நெருக்கடியும் எவ்வளவு நீடித்த காலத்திற்கு சமாதானம் பாதுகாக்கப்படுகிறதோ, அந்த அளவிற்கு இரண்டு உலகங்களுக்கிடையிலான் வித்தியாசம் அதிகமாகிறது. சோ. வ.-வும், புரட்சிகர இயக்கமும் அசுர பலமாக வளர்கிறது; ஆகவே இறுதி நோக்கமாக, புரட்சியானது யுத்தத்தைத் ~~தவிர்த்து~~ தடுத்து நிறுத்தும் சாத்தியப்பாடும், ஏகாதிபத்தியத்தை ஒழிப்பதின் மூலம் யுத்த அபாயத்தையே அகற்றும் சாத்தியப்பாடும் வளர்கிறது. *. மாலென்கோவ் தோழரும், இந்த நூல் அடிப்படையாகக் கொண்ட 19வது ஜனவரியின் கட்சிக் காங்கிரஸின் தலைமை வேலைகளும், உலகப் புரட்சி இயக்கத்தின் இன்னும் திறந்துகாட்டும் தன்மை (எதிர்காலம்) சித்தனையதே. **. சுதந்திரத்தைப் பாதுகாத்தல் பற்றி:- தோ. க. கட்டுரை 19வது பகுதியில் ஆற்றிய உரையின் மிக முக்கியமான பாகத்தில் "இலங்கை", ஏகாதிபத்திய உலகத்தின் பிற்போக்கான பூர்ஷுவா தலைவர்களின் சுதந்திரத்தைப்பற்றி மிகவும் ஆழ்ந்த கருத்துமிக்க பரிசீலனை செய்துள்ளார். கம்யூனிஸ்ட்களும், ஜனநாயகக் கட்சிகளும் ஆற்ற வேண்டிய பங்கை வரைந்துள்ளார். *. பிற்போக்கான பூர்ஷுவாக்கள் இன்று நாட்டின் உரிமைகளையும், சுதந்திரத்தையும் விற்கின்றனர். கடந்த காலத்தில் எந்த தேசிய அரசுரிமையைப் பெறுவதற்காக அவர்கள் போராடினார்களோ, அது இன்று அவர்களுக்குத் துச்சமாகப்படுகிறது. ஒரு காலத்தில் எந்த ஜனநாயக சுதந்திரங்களுக்காகப் போராடினார்களோ, எவர்கள் பதாகையை அது உயர்த்தியதோ அவையெல்லாம் இன்று அதனுடைய தேச விரோதக் மக்கள் விரோதக் கொள்கைகளைப் பலப்படுத்தும் பாதையில் முட்டுக்கட்டையாக நிற்கின்றன. ஆகவே, அது ஜனநாயக சுதந்திரங்களை நாசம் செய்கிறது. *. இந்த நிலைமையில், ஒவ்வொரு நாட்டிலுமுள்ள கம்யூனிஸ்ட், ஜனநாயகக் கட்சிகள் தான் தேச சுதந்திரம், தேச அரசுரிமை, சுதந்திரங்கள் ஆகியவற்றுக்காக போராட வேண்டும். அந்த பதாகையை உயர்த்திப் பிடிக்க வேண்டும். *.